# ஏகத்துவமும் இணை வைத்தலும்

**கலீபதுல் காதிரி, மௌலவி பாஸில், ஷெய்கு ஏ.எல்.பதுறுத்தீன் ஸூபி (ஷர்க்கி – பரேலவி) அவர்கள்**

"ஒவ்வொரு பொருளையும் அதற்கு எதிரானதின் மூலம் அறிந்துகொள்ள முடியும்" என்று அறபியில் ஒரு பழமொழி உண்டு.

நிழலின் அருமையை, வெயிலின் கொடுமையிலிருந்தும், ஆரோக்கியத்தின் சுகத்தை, நோயின் மூலமும், வெளிச்சத்தை, இருளின் மூலமும் தெரிந்துகொள்ள முடியும். அதுபோல், தவறான ஒன்றின் தோற்றப்பாட்டை புரிந்து கொள்ளாதவன், தௌஹீதின் எதார்த்தத்தை அறிந்து விளங்கமாட்டான்.

அல்லாஹுத்தஆலா தௌஹீத், ஷிர்க் பற்றி மிகத் தெளிவாகக் கூறியுள்ளான். இதனால், மார்க்கமற்ற கோட்பாடுகளை அழித்துள்ளான். தௌஹீத் கோட்பாடு திருக்குர்ஆனில் மிகத் தெளிவாகக் கூறப்பட்டிருந்தும், முஸ்லிம்கள் இது பற்றி தெளிவற்றவர்களாக குழம்பிப்போய்யிருப்பது வேதனை தரும் வியப்பான ஒன்றாகும்.

**தௌஹீத் என்றால் என்ன?**

அல்லாஹுத்தஆலாவின் பரிசுத்தமான தாத்தை அவனுக்குரிய தாத், பண்புகளில் வேறு ஒருவரை கூட்டாக்காமல் பரிசுத்தப்படுத்துவது "தௌஹீதி"ன் பொருளாகும். அதாவது, அல்லாஹ்வைப்போன்று வேறு ஒருவரை அல்லாஹ் என்று நம்பாதிருத்தல். அல்லாஹ்வின் தாத்திற்கு இருக்கும் தகுதியை வேறு ஒருவரின் தாத்திற்கும் இருப்பதாக நம்புவது அல்லாஹ்வின் தாத்தில் "ஷிர்க்" வைப்பதாக அமையும்.

அறிவு, கேள்வி, பார்வை உள்ளிட்ட அல்லாஹ்வின் பண்புகள் அவன் அல்லாதவர்களுக்கும் உண்டு என்று நம்புவது அவனது பண்பில் "ஷிர்க்" கற்பித்ததாக அமையும்.

**தௌஹீத், ஷிர்க் வேறுபாடு**

அல்லாஹ்வின் 'தாத்' பரிசுத்தமாக இருக்கும் நிலையில், அவனது தாத்தையும், பண்புகளையும் அவனது தாத்திற்கு நிகராக்காமல் இருப்பதுதான் தௌஹீதின் பொருள் என்பது தெளிவாகிவிட்டது.

இங்கு சில ஐயங்கள் எழுகின்றன. அல்லாஹ்வின் பண்புகளில் "அறிவும்" ஒன்று ஆனால், அல்லாஹ் அல்லாதவர்களுக்கும் "அறிவு" இருப்பதாக கூறுகின்றோம். அப்படியாயின், "ஷிர்க்" வந்துவிடுமா? கேற்பவன் (ஸமீஃ) பார்ப்பவன் (பஸீத்) என்பதும் அல்லாஹ்வின் பண்புகளாகும். அல்லாஹ் அல்லாதவர்களுக்கும் இப்பண்புகள் இருப்பதாக கூறுகின்றோம் என்றால், 'ஷிர்க்' வைத்துவிட்டோம் என்ற குற்றம் வருமா? இவ்வாறு அல்லாஹ்வுக்கு ஜீவன் (ஹயாத்) என்ற ஒரு பண்பு உள்ளது. அவனல்லாதவர்க்கும் ஜீவன் (ஹயாத்) என்ற பண்பு இருப்பதாக உறுதி செய்கின்றோம். என்றால், முஷ்ரிக்காகி விடுவோமா?

**அல்லாஹ்வின் ஜீவனும், மனிதனின் ஜீவனும்**

அல்லாஹ் ஜீவன் (ஹயாத்) உள்ளவனாக இருக்கின்றான். என்பது அனைவரும்

ஏற்றுக்கொண்ட ஒன்றுதான். அத்துடன், அல்லாஹுத்தஆலா யாருக்கெல்லாம் ஹயாத் (ஜீவன்) என்ற பண்பை வழங்கினானோ அவர்கள் அனைவரும் ஜீவன் உள்ளவர்களாகவே இருக்கின்றனர். அப்படியாயின், நாம் நமக்கும் ஹயாத் (ஜீவன்) என்ற பண்பு இருப்பதாகவும், அல்லாஹ்வுக்கும் ஹயாத் (ஜீவன்) என்ற பண்பு இருப்பதாகவும் நம்புகின்றோம். என்றால் அதன்பொருள் என்ன?

அல்லாஹ்வுக்கு ஜீவன் உள்ளதாக நம்புகின்றோம். அவ்வாறு நமக்கோ, ஏனையவர்களுக்கோ இருப்பதாக நாம் நம்புவதில்லை. ஏனெனில், அல்லாஹ்தான் நமக்கு ஜீவன் - தருபவன். அல்லாஹ்வுக்கு யாரும் உயிர் - ஹயாத்தை வழங்குவதில்லை. நமக்குரிய ஜீவன் தற்காலிகமானது, அல்லாஹ்வால் வழங்கப்பட்டது, வரையறை உள்ளது, அழிவுக்கு பாத்திபமானது.

அல்லாஹ்வின் ஹயாத் - ஜீவன் வழங்கப்பட்டதல்ல, தற்காலிகமானதுமல்ல, வரையறைக்குட்பட்டதுமல்ல, அழியும் தன்மை பொருந்தியதுமல்ல, அல்லாஹ்வின் ஹயாத் - நித்தியமானது. நமது ஹயாத் ஜீவன் - அழியக்கூடியது. அல்லாஹ்வின் ஹயாத் வழங்கப்படாதது. நமது ஹயாத் வழங்கப்பட்டது. இப்படிப்பார்க்கும்போது சமத்துவம், அல்லது கூட்டாக்குதல் என்பது இல்லாமலாகிவிடுகிறது. இந்த வகையில் “ஷிர்க்” ஏற்பட முடியாதுள்ளது. இவ்வாறு ஏனைய பண்புகளையும் ஒப்பு நோக்கினால் பிரச்சினை தூரமாகிவிடும்.

**அல்லாஹ்வின் சக்தியும், மனிதனின் விருப்பாற்றலும்**

மனிதனுள் அல்லாஹ் ஏதும் விஷேடமான ஓர் ஆற்றலை படைத்திருக்காவிட்டால், மனிதனுக்கும் பாறைக்கல்லுக்கும் வேறுபாடு இல்லாது போய்விடும். அல்லாஹுத்தஆலா சக்தியுள்ளவன். சுயமாகச் செய்யும் சுதந்திரமுள்ளவன். மனிதனுள்ளும் சக்தியும், சுயமாகச் செய்யும் விருப்பாற்றலும் உண்டு. இதனை அல்லாஹ்வே மனிதனுள் வைத்துள்ளான். இதனால்தான் மனிதனும் ஒன்றை தேர்வுசெய்து சுயமாகச் செய்யும் தகுதியினைப் பெற்றுள்ளான். சிலர் கேட்கலாம், அல்லாஹ்வும் சுயமாகத் தேர்ந்து செய்பவன். (முக்தார்) மனிதனும் சுயமாகத் தேர்வு செய்து செய்பவன் (முக்தார்) இது எப்படி சாத்தியமாகும்?

அல்லாஹ் முக்தார் - சுயமாகத் தேர்ந்தெடுப்பதில் எவரிடமும் தேவையற்றவன். இக்தியார் - சுயமாகத் தேர்வு செய்யும் ஆற்றலை அல்லாஹ்வுக்கு எவரும் வழங்கவில்லை. அதனால், அந்தப்பண்பை “தாத்தி” சுயமானது என்கின்றோம். அடியான் தனது சுயவிருப்பாற்றில் அல்லாஹ்வின்பால் தேவையுள்ளவன். இப்பண்பு மனிதனுக்கு அல்லாஹ்வால் நன்கொடையாக வழங்கப்பட்டுள்ளது.

**நித்திய ஞானமும், மனித ஞானமும்**

அறிவு, ஞானம் மனிதனின் அணிகலன். ஆனால், அறிவு அல்லாஹ்வின் பண்பில் உள்ளது. எனின் ஷிர்க் வந்து விடுமா? இல்லை. நாம் முன் கூறியவாறு அல்லாஹ்வின் அறிவு நித்தியமானது, பூர்வீகமானது, யாராலும் வழங்கப்படாதது. மனிதனின் அறிவு அல்லாஹ்வால் வழங்கப்பட்டது, புதிதானது, தற்காலிகமானது. இவ்வாறுதான் அல்லாஹ்வின் பண்புகளையும் அதுபோன்று மனிதனுக்கும் இருக்கின்ற பண்புகளையும் ஒப்புநோக்கிக் கொள்ளுதல் வேண்டும்.

மனிதனுக்கு வழங்கப்பட்ட அனைத்து பண்புகளும் அல்லாஹ்வின் ஆளுகைக்குட்பட்டவைகளாகும். இதுதான் உலூகிய்யத் தெய்வீகத்தன்மையாகும் - அப்திய்யத் - அடிமைத்துவத்திற்குமிடையில் உள்ள வேற்றுமையாகும். இப்போது ஷிர்க்கின் பொருள் புரிந்திருக்கும். அல்லாஹ்வுக்குரிய பண்புகளை அதே தரத்தில் அடுத்தவர்களுக்கும் இருப்பதாக நம்புதலுக்குப் பெயர்தான் "ஷிர்க்" ஆகும். ஆனால் அல்லாஹ்வின் பண்புகளை அல்லாஹ் வழங்கிய பண்புகளுடன் ஒப்பிட்டால் ஒருபோதும் ஷிர்க் வரப் போவதில்லை.

ஜீவன், அறிவு, கேள்வி, பார்வை, பேச்சு, நாட்டம், சக்தி உள்ளிட்ட பண்புகள் அல்லாஹ்வுக்கும் உண்டு. மனிதனுக்கும் உண்டு. ஆனால், அல்லாஹ்வின் பண்புகள் தெய்வீகமானது. தெய்வீகத்தன்மையுள்ள அல்லாஹ்வின் பண்புகள் அவன் அல்லாத எவருக்கும் இருக்க முடியாது. அல்லாஹ்வின் பரிபூரணமான பண்புகள் நிச்சயம் அவனல்லாத எப்படைப்புக்கும் சாத்தியமாகாது.

சிலைகளை வணங்குகின்ற முஷ்ரிக்குகளிடம் அந்த விக்கிரகங்களை படைத்தது யார்? வானம் பூமியை படைத்தவன் யார்? என்று அவர்களிடம் கேட்டால் நிச்சயமாக அல்லாஹ் என்றே விடை பகர்வர். அப்படியாயின் என்ன பொருள்? இங்கு இவர்கள் எப்படி முஷ்ரிக் ஆனார்கள், என்று சிலர் ஆட்சேபனைகளை முன்வைக்கலாம்.

அல்லாஹுத்தஆலா அனைத்தையும் படைப்பவன் என்று நம்புவது மாத்திரம் ஷிர்க்கிலிருந்து விடுபடுவதற்குப் போதுமான ஒன்றல்ல. அல்லாஹ்வின் தனித்துவமான எந்த ஒரு பண்பிலும் அல்லாஹ்வை கூட்டாக்காமல் இருக்க வேண்டும். இது முக்கியமானதாகும்.

முஷ்ரிக்குகள் தங்களின் பிழையான விக்ரகங்கள் படைக்கப்பட்டவைகள்தான் என்பதை ஏற்றுள்ளனர். இதனை ஏற்பவர்கள். ஒரு படைப்பு, படைத்தவனிடம் தேவையுள்ளவை என்பதையும் ஏற்க வேண்டும். படைத்தவனின் வுஜூத் - (இருப்பு) இன்றி படைப்புக்கு தனியான வுஜூத் (இருப்பு) இருக்க முடியாது.

ஒரு படைப்பு படைத்தலில் படைத்தவனிடம் தேவையாக இருப்பதுபோன்று மௌத் - மரணத்திலும் தேவை உள்ளவனாகவே உள்ளான். இந்த நம்பிக்கை கண்டிப்பாக இருத்தல் வேண்டும். முஷ்ரிக்குகள் இதனை ஏற்கும் அதேநேரம் பின்வருமாறும் நம்புகின்றனர்.

விக்ரகங்களை அல்லாஹ்தான் படைத்தான். அவைகளைப் படைத்தபின், அவைகளுக்கு தெய்வீகத்தன்மையை கொடுத்துள்ளான். அதனால், அல்லாஹுத்தஆலா செய்யாத ஒன்றை இவர் (விக்ரகங்)கள் விரும்பினால் செய்ய முடியும். ஏனெனில், இவர்கள் தற்போது அல்லாஹ்வின் கட்டுப்பாட்டில் இல்லை. சுயமாகச் செய்யும் உரிமையை அவர்களுக்கு அல்லாஹ் வழங்கியுள்ளான். அவனது அனுமதியின்றி விரும்பியதைச்செய்யும் ஆற்றல் உண்டு என்று கூறியுள்ளான் என்றுதான் முஷ்ரிக்குகள் நம்புகின்றனர். இவர்கள் முஷ்ரிக்குகளாக ஆனதற்கு இதுவே பிரதானமான காரணமாகும். எந்த ஒரு நிலையிலும் ஒரு படைப்பு அல்லாஹ்வின் கட்டுப்பாட்டிலிருந்து வெளியேற முடியாது. என்பதை அவர்கள் விளங்கிக்கொள்ளத் தவறிவிட்டனர்.

**உலூஹிய்யத் வழங்கப்பட மாட்டாது.**

அல்லாஹுத்தஆலா எதையும் வழங்குவான். ஆனால், உலூஹிய்யத் - தெய்வீகத் தன்மையை வழங்கமாட்டான். ஏனெனில், உலூஹிய்யத் என்பது சுயமானது. (முஸ்தகில்லு) வழங்கப்படும் எதுவும் (முஸ்தகில்லு) சுயமானதாக ஆகமுடியாது. உலூஹிய்யத் என்பது - இஸ்திக்லால் - சுயமானது என்ற பொருளைக் கொண்டுள்ளது.

“லாத்” - “மனாத்” உள்ளிட்ட விக்ரகங்கள், வணக்க வழிபாடுள்ள துறவிகளான மனிதர்கள்தான் என்று முஷ்ரிக்குகள் நம்பினர். முழுமையான வணக்க வழிபாடுடையவர்களாகி நிர்வாணமடைந்து விட்டனர். அதனால் இவர்கள் விடுதலையடைந்து விட்டார்கள். அனைத்துச் சுதந்திரமும் இப்போது இவர்களுக்குண்டு. பர்ளோ, கடமையோ எதுவும் கிடையாது. இந்நிலையில் இவர்கள் தனித்துவமான தெய்வீகத்தன்மை பெற்றுள்ளனர் என்று நம்பினர்.

யாராவது ஒருவர், யாருக்காவது உலூஹிய்யத் என்ற பண்பை அல்லாஹ் வழங்கிவிட்டான் என்று நம்பினால், ஐயமற அவன் முஷ்ரிக், முல்ஹித் ஆவான். முஷ்ரிக்கிற்கும், முஃமீனுக்கும் இடையில் வேறுபாட்டைப் பிரிக்கும் எல்லைக்கோடு இதுவாகும்.

அல்லாஹ் அல்லாதவர்களுக்கும் உலூஹிய்யத் உண்டு என்று “முஷ்ரிக்” நம்புகின்றான். ஒரு அடியான் எத்தனை இறை நெருக்கத்தை பெறினும் உலூஹிய்யத்தைப் பெறமுடியாது. நபிகள் கோமான் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் எவரும் நெருங்காத இறை நெருக்கத்தைப் பெற்றார்கள். இவர்கள் விடயத்தில் எவரும் இப்படிக் கூறியதில்லை. அவர்களை அடிமை என்றுதான் விளிக்கின்றோம்.

### மனித படைப்பின் நோக்கம்

ஒவ்வொரு பொருளையும் ஏதோ ஒரு நோக்கத்திற்காகவே அல்லாஹுத்தஆலா படைத்துள்ளான். கதிரவன் அதன் கடமையைச் செய்கின்றது, தாவரங்கள் அதன் வேலையைச் செய்கின்றன. காற்றும் அதன் பொறுப்பை நிறைவேற்றுகின்றது. மனிதனை அல்லாஹ் படைத்தான், அதற்கும் ஏதோ ஒரு காரணம் இருக்கத்தானே வேண்டும். அதனை அல்லாஹுத்தஆலா திருமறையில் இப்படி விளக்குகின்றான்.

“நான் மனிதனையும் ஜின்களையும் என்னை வணங்குவதற்காகவே படைத்தேன்”.

**(அல்குர்ஆன்)**

அல்லாஹ்வைப் பற்றி அறியும்போதுதான். அவனுக்கான இபாதத் சீராகும். அதனால் மனிதனை அவனை அறிவதற்குப் படைத்துள்ளான். அல்லாஹ்வை அறிவதன் நோக்கம்தான் என்ன? எவர் அல்லாஹ்வின் ஸிபாத்துக்களை எந்தளவு அறிகின்றாரோ அந்தளவு அவனது நெருக்கத்தைப் பெறுவார். அதாவது அல்லாஹ்வைப் பற்றி ஒரு மஃரிபத்து (அறிவின்) அளவு அவனது நெருக்கம் இருக்கும். மனிதன் படைக்கப்பட்டதன் குறிக்கோள் அல்லாஹ்வை அறிவதாகும் மஃரிபாவின் குறிக்கோள் அல்லாஹ்வின் நெருக்கமாகும். எனவே, இறை நெருக்கம்தான் மனிதனின் பூரணத்துவமாகும். இந்தப் பூரண நிலையை விரிவாக நோக்கும்போதுதான் கணிசமான பிரச்சினைகளுக்கு விடிவு வரும்.

நெருக்கத்தின் பொருள், குறிக்கோள், புரிதல் எப்படியானது என்பதை

ஷரீஅத்தின் வெளிச்சத்தில் ஆராய்வோம்.

**ஹதீஸில் குத்ஸி**

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கூறுகின்றார்கள், அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்..

“எனது வலிக்கு வேதனை செய்பவன் என்னோடு போர் தொடுக்கத் தயாராகி விட்டான். என் அடியான் என்னை நெருங்கும் அமல்களிலெல்லாம் எனக்கு மிக விருப்பமானது, பர்ழான வணக்கங்களினால் நெருங்குவதாகும்”
**(அல்ஹதீதுல் குத்ஸி)**

“எனது அடியான் நபிலான வணக்கங்களினால் நான் அவனை நேசிக்கும் வரை நெருங்கிக் கொண்டே இருப்பான். நான் அவனை என் நேசத்திற்குரியவனாக எடுத்துக் கொண்டால் அவர் கேட்கும் கேள்வியாக, அவர் பார்க்கும் பார்வையாக, அவர் விரிக்கும் கரமாக, அவர் நடக்கும் நடையாக நானே ஆகி விடுவேன். அவர் என்னிடம் கேட்டால் நிச்சயம் வழங்குவேன். என்னிடம் இரட்சிப்புத் தேடினால் இரட்சிப்பேன்”.

**ஆதாரம்** : **புகாரி ஷரீப்**

இந்த ஹதீஸுக்கு புதிதாகச் சிலர் விளக்கங்கள் பகர்கின்றார்கள். அதாவது அல்லாஹ்வின் நெருக்கத்தைப் பெற்றவர் தீயவற்றை கேட்கமாட்டார். கண்ணால் தீயவற்றைப் பார்க்கமாட்டார், கையால், காலால் ஷரீஅத்திற்கு விரோதமான எதனையும் செய்யமாட்டார்.

இது முற்றிலும் பிழையான விளக்கமாகும். ஹக்கின் பொருளை திரிபுபடுத்தும் மோசடியாகும், இவர்களின் விளக்கத்தை ஆழ்ந்து நோக்கினால் அல்லாஹ்வின் நெருக்கத்தினால் அவன் நெருக்கத்தைப் பெற்றவர்களின் அவயங்களினால் எந்த ஒரு பாவமும் நிகழாது. அவர்கள் செய்யும் யாவும் ஷரீஅத்திற்கு உட்பட்டதுதான் இந்த புது வித விளக்கத்தை ஹதீஸின் வார்த்தைகளுடன் ஒத்துப் பார்த்தால் இக்கருத்து எந்தளவு பிழையானது என்பது புலப்படும்.

ஒருவன் பாவத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொள்வதன் மூலமே இறை நெருக்கத்தையும் அவன் அன்பையும் பெற்றுக் கொள்வான் என்பதை சிறு பிள்ளையும் எளிதில் புரிந்து கொள்வான். பாவச் செயல்களைச் செய்துகொண்டே இறை நெருக்கமும் அவன் அன்பும் கிட்டும் என்று யாராவது வாதித்தால் தக்வா (இறையச்சம்), வரஃ (பேணுதல்) என்பதன் பொருள்தான் என்ன? அதன் அவசியம் ஏன்?

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்,

“நபியே கூறுவீராக! நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பதாயின் என்னைப் பின்பற்றுங்கள். உங்களை அல்லாஹ் நேசிப்பான்”.

**(அல்குர்ஆன்)**

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைப் பின்பற்றாமல் அதாவது தக்வா, பேணுதல் இன்றி அல்லாஹ்வின் அன்பைப் பெறுவது சாத்தியமில்லை. முதலில் ஓர் அடியான் தீயவைகளை விட்டொழித்து தௌபாச் செய்துகொண்டு பர்ளான, சுன்னத்தானவைகளை நிறைவேற்றும் போதுதான் அல்லாஹ்வின் நேசனாக முடியும். அல்லாஹ்வின் நேசரானதன்

பின்புதான் அல்லாஹ் அடியானின் கேள்வியாகவும், பார்வவையாகவும் அவன் விரிக்கும் கரமாகவும் நடக்கும் நடையாகவும் மாறி விடுகின்றான். இவை யாவும் அல்லாஹ்வின் நேசரானதன் பின்னர் நடப்பவையாகும்.

அதாவது ஓர் அடியான் அல்லாஹ்வின் நெருக்கத்தைப் பெற்றுக் கொண்டால் அல்லாஹ்வின் கேள்வி, பார்வை, சக்தி ஆகியவற்றின் பேரொளி அடியானில் வெளியாகின்றன. இந்த வகையில் அடியான் அல்லாஹ்வின் பேரொளி வெளியாகும் தளமாக மாறி விடுகின்றான்.

அதாவது அல்லாஹ்வின் நேசத்தைப் பெற்ற அடியான் அல்லாஹ்வின் கேள்வி என்ற பேரொளியால் கேட்பான். அவன் பார்வை என்ற ஒளியால் பார்ப்பான். அவனது குத்ரத்தின் ஒளியால் அதிகாரம் செலுத்துவான். தவிர அல்லாஹ் இவனில் இறங்கி விட்டான் என்பது பொருளல்ல! அல்லது அடியான் அல்லாஹ்வாக ஆகி விட்டான் என்பதும் பொருளல்ல!

அல்லாஹ்வின் நெருக்கத்தைப் பெற்றுக்கொண்ட இந்த நல்லடியார் அல்லாஹ்வின் நெருக்கத்தினால் அல்லாஹ்வின் திருநாமங்கள், பண்புகள் வெளியாகும் தளமாக மாறி மனிதனின் உச்ச பூரண நிலையை எய்தியவராக கருதப்படுவார். எந்த நோக்கத்திற்காக மனிதன் படைக்கப்பட்டானோ அந்த நோக்கத்தை நிறைவேற்றியவனாவான்.

ஆழமாக ஆராய்ந்து பார்த்தால், "மனிதனையும் ஜின்னையும் என்னை வணங்குவதற்காகவே படைத்தேன்" என்ற திருமறை வசனத்தின் பொருள் இதுவே என்பதை தெரிந்து கொள்வான்.

அடியான் தனது "நான்" என்ற அகந்தையையும் மனிதப் பண்புகளையும் கடுந்தவத்தினாலும், அதிக அர்ப்பணிப்பாலும் அகற்றி அல்லாஹ்வில் பனாவாகி தன்னை அழித்துக் கொண்டால், மனிதன் தனது பண்பிற்குப் பதிலாக இறைவனின் பண்புகளை பாக்கியமாகப் பெறுவான். அதாவது, இறைபண்புகள் இவனில் வெளியாகும். இறை பண்புகளால் இவன் பிரகாசமடைவான்.

ஒரு மரத்திலிருந்து, "நிச்சயமாக நான் அல்லாஹ்" என்று ஒரு சப்தம் வந்தது என்று திருக்குர்ஆன் சாட்சியம் பகர்கின்றது.

ஒரு மரத்தில் அல்லாஹ் "தஜல்லி" ஆக முடியுமாயின் மனிதனில் ஏன் சாத்தியமில்லை. சிந்திக்க வேண்டும்.

இமாம் பகுறுத்தீன் றாசி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் ஆரம்பத்தில் கூறிய ஹதீஸுக் குத்ஸிக்கு விளக்கமளிக்கும்போது,

"ஒரு அடியான் வணக்க வழிபாடுகளை மேற்கொள்வதன் மூலம் நான் அவனின் கேள்வியாக, அவன் பார்வையாக ஆகி விடுவேன் என்று அல்லாஹுத்தஆலா கூறும் உயர் நிலைக்குச் சென்றடைவான். அல்லாஹ்வின் பேரொளி அவன் கேள்வியாக மாறுமாயின், அவர் கிட்டத்தில் உள்ளதையும், தூரத்தில் உள்ளதையும் செவியேற்பார்.

இதே ஒளி அவரின் கண்ணில் வெளியாகும்போது கிட்ட, தூரம் என்ற வேறுபாடின்றி யாவற்றையும் பார்ப்பார். இதே ஒளி கரத்தின் வழியாக வெளியானால் அற்பமானது, அபாரமானது என்றில்லாமல் எல்லாவற்றிலும்

ஆதிக்கம் செய்வார். இதே ஒளி நடையாகும்போது காலம் வெளியில் அதிகாரம் புரிவார்.

**ஆதாரம்** : **தப்ஸீர் கபீர்**, **பாகம் - 21**, **பக்கம் - 91**

இமாம் பகுறுத்தீன் றாஸி ரஹ்மத்துல்லாஹி அவர்கள் மேற்கண்ட ஹதீஸ் குத்ஸிக்கு எழுதிய விளக்கத்தை மனிதனின் அடிமைத் தனத்தையும், மனிதத் தன்மையையும் நன்கு விளங்கியே எழுதியுள்ளார்கள். இவர்களின் இவ்விளக்கம் அடியானின் அடிமைத் தனத்திற்கோ அல்லது மனித நிலைக்கோ எதிரானது அல்ல. அல்லாஹ்வின் பண்புகள் அடியானில் பரிணாமிப்பதுதான் மனித நிலையின் பரிபூரணமாகும்.

அல்லாஹ்வின் நெருக்கத்தைப் பெற்ற அடியானில் வெளியாகும் பண்புகள் அடியானின் சொந்தப் பண்புகளாகாது. அல்லாஹுத்தஆலாவின் சாயலாகும். சாயல் அல்லது நிழல் ஒருபோதும் தனித்து நிற்க முடியாது. நிழலுக்குரியவன்தான் தனித்து நிற்பான்.

அதனால், உண்மையான தௌஹீத் என்பது அல்லாஹுத்தஆலாவின் உண்மையான நெருக்கத்தைப் பெற்றுக் கொள்வதன் மூலம் இறைவனின் பண்புகளின் கண்ணாடியாகின்றான். இமாம் பகுறுத்தீன் றாஸி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகின்றார்கள்,

அல்லாஹ்வின் பார்வையின் ஒளி இவரின் விழித்திரையில் படுமாயின், தூரம், கிட்ட என்ற வேறுபாடின்றி யாவற்றையும் அவர் பார்ப்பார். அல்லாஹ்வின் ஆற்றல் அவரின் கரத்தில், காலில், மூளையில், உறுப்புக்களில் வெளியானால் கடினமான, இலகுவான, யாவற்றிலும் காலம் வெளி என்ற வேறுபாடின்றி யாவற்றிலும் அதிகாரம் செலுத்துவார், யாவற்றிலும் ஆற்றல் மிக்கவராவார்.

ஆற்றல்பெற்ற அடியானால் ஆதிக்கம் செலுத்துவது அசாத்தியமாகி விடுமா! சிந்திக்க வேண்டும். அல்லாஹ் தேவைகளை நிறைவேற்றுவது, உதவி செய்வது, கஷ்டங்களை நீக்குவது என்பதெல்லாம் அவனது சுயமான ஆற்றலால் செய்வதாகும். அல்லாஹ்வின் வலிமார்கள் உதவி செய்வது, கஷ்டங்களை நீக்குவது, அல்லாஹ் கொடுத்த சக்தியினால் செய்வதாகும்.

அல்லாஹுத்தஆலா அவனது தனிப்பெரும் ஆற்றலினால் ஆட்சி செய்கின்றான். அவனது செயலுக்கு வெறும் துணையாகவோ, உதவியாகவோ எவருமில்லை. அதனால், அவன் செயலை "தாத்தியானது" என்பர். தாத்தியானது என்றால் சுயமாகச் செய்தல் என்று பொருளாகும்.

அல்லாஹ் படைத்த படைப்புக்கள் அல்லாஹ் கொடுத்த ஆற்றலினால்தான் செயற்படுகின்றன. சுயமாகச் செய்யும் ஆற்றல் இவர்களுக்கு கிடையாது. அல்லாஹ்வின் நாட்டமும், ஆற்றலுமின்றி எவருக்கும் எதுவும் நிச்சயம் செய்ய முடியாது. அதனால், இவர்களின் செயலை "அதாயி" என்று சொல்லப்படும். "அதாயி" என்றால் அல்லாஹ் வழங்கிய ஆற்றலினால் செய்தல் என்று பொருள்படும்.

அல்லாஹ்வின் சுயமான (தாத்தியான) செயலும், அல்லாஹ் வழங்கிய (அதாயியான) செயலும் ஒருபோதும் சமனாக (ஷிர்க்காக) முடியாது. இரண்டு விடயங்கள் அல்லது செயல்கள் எல்லா விடயத்திலும் சமனாக ஆகும்போதுதான் "ஷிர்க்" வரும். இங்கு சமத்துவம் காணப்படவில்லை. அதனால், ஷிர்க் என்பது

எவ்விதத்திலும் சாத்தியமில்லை.

அல்லாஹ்வின் நெருக்கத்தைப் பெற்ற நல்லடியாரின் கேள்வி, பார்வை, நடை, அசைவு அனைத்தும் அல்லாஹ்வின் பண்பினாலும் ஆற்றலினாலும் நிகழ்வதாக ஹதீஸ் குத்ஸியில் அல்லாஹ் குறிப்பிடுகின்றான்.

அதனால், அல்லாஹ்வின் நெருக்கத்தைப் பெற்ற வலிமார்கள் மிக இலகுவாகவே சகல காரியங்களையும் செய்யும் ஆற்றலையும், விருப்பத்தையும் பெற்றுள்ளனர் என்பது தெளிவாகி விட்டது. அல்லாஹ்வின் பார்வைக்கும், கேள்விக்கும் தூரம் தடையாகாது.

அதனால், வலிமார்கள், தூரம் கிட்ட என்ற வேறுபாடின்றி பிரபஞ்சத்தில் எதிலும் எங்கும் அதிகாரம் செலுத்தும் ஆற்றலைப் பெற்றுள்ளனர். அல்லாஹ்வின் நெருக்கத்தை இவர்கள் பெற்றதனால் அல்லாஹ்விடம் வேண்டியதைக் கேட்கவும், அவனைத் திருப்திப்படுத்தவும் ஆன தகுதியையும் இவர்கள் பெற்றுள்ளனர்.

மக்கத்துப் காபிர்களிடம் ஒரு நம்பிக்கை காணப்பட்டது. அதாவது, அவர்கள் வணங்கும் கல், விக்ரகங்களுக்கு உலகில் ஆட்சி அதிகாரம் செய்யும் விருப்பாற்றலையும் அனுமதியையும் அல்லாஹ் வழங்கியுள்ளான்.

உண்மையில் இவைகளுக்கு அல்லாஹ் இப்படி ஒரு அனுமதியை வழங்கவில்லை. அவர்கள் அறியாத்தனத்தினால் அல்லாஹ் மீது பாரிய அவதூறைக் கூறுகின்றனர்.

ஆனால், அல்லாஹ்வின் நெருக்கத்தைப்பெற்ற நபிமார்கள், வலிமார்களுக்கு அல்லாஹ் விருப்பாற்றலையும் அனுமதியையும் வழங்கியுள்ளான். நபிமார்கள், வலிமார்கள் செயலில், அல்லாஹ்வின் அனுமதியுடனான இக்தியார் விருப்பாற்றல் உண்டு என்று நாம் கூறும் வார்த்தை அல்லது நிபந்தனை ஷிர்க்கை விரட்டி விடுகின்றது.

நபிமார்கள், வலிமார்கள் உதவிசெய்பவர்கள், கஷ்டங்களை நீக்குவார்கள் என்று நாம் கூறுவதில் பிழை காண்பவர்கள் ஒரு தந்திரத்தை மேற்கொள்கின்றனர்.

விக்ரகங்களை பற்றி இறங்கிய திருவசனங்களை நபிமார்கள் வலிமார்களுக்கு சுமத்தி காபிர்களையும், முஸ்லிம்களையும் சமப்படுத்திக் கூறுகின்றனர். உண்மையில் இது ஒரு மோசடியாகும். இம்மோசடியை முதன் முதலில் செய்தவர்கள் வழி தவறிய கவாறிஜிகளாகும்.

இவர்கள் காபிர்கள், முஷ்ரிக்குகள் விடயத்தில் இறங்கிய திருவசனங்களை முஸ்லிம்கள் மீது சுமத்தி முஸ்லிம்களையும் காபிர், முஷ்ரிக் என்று கூறினர். அதனால், கவாறிஜிகளைப் பற்றி ஹளரத் அப்துல்லாஹ் இப்னு உமர் ரழியல்லாஹு அன்ஹுமா கூறும்போது,

"கவாறிஜிகள் அனைத்து படைப்பிலும் கொடியவர்கள். காபிர்கள் விடயத்தில் இறங்கிய திருவசனங்களை முஸ்லிம்கள் பேரில் இவர்கள் சுமத்தினர்"

இதனை இமாம் புகாரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி தங்களது ஸஹீஹ் புகாரி ஷரீபில் "கவாரிஜிகளுடன் ஆனபோர்" என்ற பாடத்தில் பதிவு செய்துள்ளார்கள்.

அல்லாஹ்வின் நெருக்கத்தைப் பெற்ற ஒரு நல்லடியார் அல்லாஹ்வின்

பண்புகள் தஜல்லி (வெளி)யாகும் கண்ணாடியாக இருப்பதெல்லாம் இவ்வுலகில் உயிருடன் வாழும்போதுதான் சாத்தியமாகும். மரணித்தபின் எப்படி சாத்தியமாகும்? ஒருவர் மரணித்தால் அவர் உடல் மண்ணோடு மண்ணாகி விடுகின்றது.

மண்ணோடு மண்ணாகி விட்டவர் மனிதப்புனிதர் என்றோ, அல்லாஹ்வின் பண்புகள் வெளியாகும் கண்ணாடியாக இருக்கின்றார் என்பதோ எப்படிக் கூற முடியும்? இவையெல்லாம் மரணத்துடன் முடிந்த கதையாகிவிட்டதே. அவரின் கேள்வி பார்வை ஆற்றல் பார்வை யாவும் மரணத்தால் மிஞ்சி விடுகின்றன என்று சிலர் கூறுகின்றனர். இது அறியாமையில் எழுந்த கேள்வியாகும்.

எலும்பும் தசையுமுள்ள மாமிசப் பிண்டம்தான் மனிதனின் பூரணத்துவம் என்று இவர்கள் கற்பனை செய்து கொண்டுள்ளனர். இது பிழையான கணிப்பீடாகும். இது மணிதனின் எதார்த்தமல்ல.

மனிதனின் எதார்த்தம் மரணத்தின் பின்பும் தொடர்கிறது. உயிரும் உடலும் சேர்ந்த ஒரு தோற்றமே மனிதனைப் பற்றி எண்ணும்போது கண் முன் வருகிறது. இவை இரண்டிலும் உயிர்தான் அடிப்படையாகும். ஒரு மனிதனின் கப்று சொர்க்கத்தின் பூங்காவாக இருக்கும் அல்லது நரகத்தின் குழியாக இருக்கும் என்று நபிகள் திலகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் கூறியுள்ளார்கள்.

கப்ரிலிருக்கும் சொர்க்கத்தின் பூங்காவும் நரகத்தின் குழியும் யாருக்கு? றூஹு என்ற ஆன்மாவுக்குத்தான் என்பது சொல்லாமல் புரியும். உடலின் பாகங்கள் அழியலாம். அல்லது சிதையலாம் சூரியன் உலகில் உள்ளவைகளின் தொடர்பு வைத்திருப்பது போல் உயிர் “றூஹ்” தனது உடலுடன் தொடர்பு வைத்துள்ளது.

மரணத்தின் பின்பும் றூஹ், உடலுடன் நிச்சயம் தொடர்பு பட்டேயிருக்கின்றது. றூஹ் கதிரவனைப் போன்று உள்ளது. மரணத்தால் உடல் செயல் இழக்கின்றது. உடலின் ஒருங்கு சிதைந்துவிடுகின்றது.

உடலின் பூரணத்துவம் அஸ்தமித்து விடுகின்றது. ஒரு விரலைக் கூட மரணித்தவரால் அசைக்க முடியாது.

ஆனால், றூஹின் பண்புகள் அழிவதில்லை. அதன் பூரணத்துவம் பூச்சியமாவதில்லை. எனவே, றூஹின் தனித்துவத் தன்மைகளும் அதன் ஆற்றல்களும் அழியாமல் நிலைத்து இருக்கின்றன. அப்படியாயின் இரு கேள்வி இங்கு எழுகின்றது.

றூஹின் ஆனந்தம் உடலின் பகுதிகளில் பிரதிபலிக்க வேண்டும். றூஹின் கவலையும் உடலைப் பாதிக்க வேண்டும். ஆனால், கப்றைத் தோண்டிப் பார்த்தால் அங்கு நெருப்போ, பூஞ்சோலையோ எதுவும் இருப்பதில்லையே! கப்றில் வெறும் வேதனைப்பட்டதை யாரும் கண்டதில்லையே!

கப்றில் நடக்கும் ஆனந்தமும், துக்கமும், வேதனையும் புலக் காட்சிக்குட்பட்டதில்லை. அவை பர்ஸக் என்ற உலகைச் சார்ந்தவையாகும். பர்ஸக் என்ற உலகின் காட்சிகள் உலகில் புலப்படுவதில்லை. உணரப்படுவதுமில்லை. கனவுக் காட்சி நமக்குப் புலப்படுவதில்லை. மனதின் மகிழ்வும் துக்கமும் உடலின் வலியும் வேதனையும் நமது புலனுக்குக் காட்சியளிப்பதில்லை.

அபார தொழிநுட்பமான கருவியைப் பொருத்திப் பார்த்தாலும் கூட கனவுக் காட்சியையோ, உடலின் இன்ப துன்பங்களையோ, வலிகளையோ கண்டறிய முடியாது. இவற்றின் உண்மைத் தன்மையை உரியவரால் மட்டுமே உணர முடியும்.

இதுபோன்றுதான், கப்றிலிருக்கும் மையித்தின் உடற்பாகங்களின் சுக துக்கங்களுக்கும் றூஹ் அதன் பாகங்களுடன் வைத்திருக்கும் தொடர்பாடல் அது அதுவாகவே உணர்கின்றது. மையித்தின் வேதனையை மையித்தால் மட்டுமே உணர முடியும்.

மையித்தின் எலும்பை முறிப்பது உயிருடன் உள்ளவரின் எலும்பை முறிப்பது போன்றே அது வேதனைப்படும் என்று ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் கூறியுள்ளார்கள். இதை இங்கு நன்கு கவனித்தால் வினாவுக்கான விடை தெளிவாகி விடும்.

**கப்றின் காட்சிகள்**

மரணித்தவரின் உடலை கப்று நெருக்கும், இந்த நெருக்கம் முஃமீனுக்கும் உண்டு. காபிருக்கும் உண்டு. முஃமீனை கப்று ஏன் நெருக்க வேண்டும்? இது ஆழமாக நோக்க வேண்டியதாகும்.

கப்று ஓர் அன்னையின் மடியை ஒத்திருக்கின்றது. தாயின் மடியில் குழந்தை இருப்பது போன்றே கப்றில் மரணித்தவரின் உடல் உள்ளது. தாயை "உம்மு" எனபர். ஒன்றின் அடிப்படை மூலத்திற்கும் தாய் என்று கூறுவது வழக்கம். குழந்தைக்கு அடிப்படை தாய். இவ்வாறு அனைத்து மனிதர்களுக்கும் அடிப்படை மூலம் மண் ஆகும். அதனால், அது தாயின் அந்தஸ்தில் கபுறு உள்ளது.

ஒரு தாய் பிள்ளையைப் பெற்றெடுத்து வளர்த்துப் பெரியவனாக்கிய பின் அவனை சுயமாக இயங்க விடுவாள். அவன் செயல்கள் சீராகவும் சிறப்பாகவும் இருந்தால் அவன் வரவை மகிழ்வுடன் எதிர்பார்த்து நிற்பாள். கண்டதும் அவனைக் கட்டி அணைத்து களிப்புறுவாள். அவன் துஷ்டனாகி தீய காரியங்களில் ஈடுபட்டால் அவனைக் கண்டிக்கவும், தண்டிக்கவும் அவன் வரவை எதிர் பார்ப்பாள்.

இதுபோன்றே நமக்கு மூலமான மண் ஆன கப்று மனிதனை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றது. தாய் அன்பு மேலீட்டால் பிள்ளையை கட்டியணைத்து நெருக்கும்போதும், செல்லமாகக் கிள்ளும்போதும் அதை ஒரு தண்டனையாகவோ, வேதனையாகவோ பிள்ளை உணர்வதில்லை.

அதற்காக வருத்தப்பட்டு வேதனைப்படுவதில்லை. இதுபோன்றே முஃமீனை கப்று நெருக்கும்போது அதை ஒரு நெருக்கமாக கருதாமல் அன்புடன் அணைப்பதாகவே கருதுவான்.

மரணத்தால், 'றூஹு' அழிந்து விடும் என்றிருந்தால் கப்று விசாரணை, கப்று வேதனை, பட்டோலைப் பரிசோதனை எதுவும் சாத்தியமற்றதாகி விடும். இவை, எதுவும் இல்லையாயின், மறுமையில் எழுப்பப்படல், விசாரிக்கப்படல் என்பதெல்லாம் எப்படி சாத்தியமாகும்?

தண்டனையும், நற்கூலியும் றூஹுக்குரியனவாகும். றூஹ் அழிந்துவிடும்

என்றிருந்தால் மார்க்கத்தின் அடிப்படையே கேள்விக் குறியாகிவிடும்.

றூஹ் அழிவதில்லை. றூஹ் எப்போதும் இருக்கும் என்பதை ஏற்றாகவே வேண்டும். அப்படியாயின் மனிதனின் "ஹகீகத்" எதார்த்தம் றூஹுதான் என்பது பட்டவர்த்தனமாகிவிடும். அல்லாஹுத்தஆலா இரு விடயங்களை எமக்கு வழங்கியுள்ளான்.

**01.** உடல் **02.** ஆன்மா. இவற்றில் உடல் அழியும். றூஹ் அழியாது, நிலைத்திருக்கும். உடல் அழிவதுடன் அதன் பண்புகளும் அழிந்துவிடும். அப்படியாயின் அல்லாஹ்வின் பண்புகள் வெளியாகும். தலமும் றப்பின் பேரழகு வெளியாகும். கண்ணாடியும். எது? உடலா? றூஹா?

இவை றூஹின் பண்புகளாகும் என்பதில் ஐயமில்லை. அப்படியாயின், றூஹ் அழியாமல் நிலைத்திருக்குமாயின் அதன் பண்புகளும் நிலைத்திருக்கத்தானே வேண்டும். தொழுகை, நோன்பு, ஸக்காத், ஹஜ் உள்ளிட்ட நல்லமல்கள் யாவும் அல்லாஹ்வுக்கான இபாதத்தாக இருப்பதுடன் அவனை நினைக்கும் திக்றுகளாகவும் உள்ளன. இவைதான் றூஹின் ஆதாரமாகும்.

ஒருவர் மரணிப்பதால் அவர் செய்த வணக்க வழிபாடுகள் நல்லமல்கள் யாவும் அழிந்து விடுமா? நிச்சயமாக இல்லை. அவை அழியாமலே இருக்கும்.

ஒருவரின் மரணத்தால், அவரின் றூஹின் பண்புகள் எதுவும் அழியாமல் நிலைத்திருக்குமாயின் ஒரு வலியினுடைய றூஹுடைய பண்புகள் மாத்திரம் அழிந்து விடுமா? வலிமார்களின் கப்றில் றூஹின் பண்புகள் உயிரோட்டமாகவே உள்ளன. றூஹின் பரிபூரணத்துவம் குறையாமல் மங்காமல் முன்பிருந்ததைவிட பல மடங்கு பிரகாசமாகவே உள்ளன.

**மலரும்...**